[28th March 1961

SRI R. SRINIVASA IYER : செக்ரடரியாகவே கர்ணங்களை நியமனம் செய்துகொள்வதற்கு தஞ்சாவூர் ஜில்லாவில் அநேகமாக எல்லோரும் சம்மதித்திருக்கிறார்களில்லையா ? கர்ணங்களையே செக்ரடரியாக வைத்துக் கொள்வது என்று அவர்கள் தீர்மானித்து இருப்பதனால் வரி வசூல் பண்ணுவது—செஸ் கணக்கு போன்றவைகள் எற்கெனவே செய்து கொண்டிருப்பதனால் அவர்களுக்கு சுலபமாக இருக்காதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதைத்தான் நான் சொன்னேன். வரி வசூல் செய்வதைப் பொறுத்த வரையிலும் கிராம அதிகாரிகள் மூலமாகத்தான் செய்ய முடியும் என்பதைக் குறிப்பிட்டேன். தஞ்சாவூர் ஜில்லாவாசிகள் புத்திசாலிகள். அதனால்தான் கர்ணங்களையே செக்ரடரியாகப் போட்டுக்கொள்ள சம்மதித்துவிட்டார்கள். அதைப் பாராட்டுகிறேன். இதைப் பார்த்தாவது மற்ற ஜில்லாக்களும் பயன்படுத்திக்கொள்வார்கள் என்று நினைக்கிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN : பல பஞ்சாயத்துக்களிலே க்ரூப் ஊழியர்கள் என்று சொல்லப்படுகிறவர்களால் வரி வசூலிக்கப் படுகிறது. இப்படி கிராம அதிகாரிகளிடத்திலே ஒப்படைக்கப்படுகிற வேலை நடக்குமா ? அவர்களை என்ன செய்ய உத்தேசம் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சரியாகக் கேள்வி போட்டால் பதில் சொல்ல முடியும்.

*Tuberculosis (cases of death)*

* 1134 *Q.*—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the number of persons who died of Tuberculosis during the last five years; and

(*b*) the figure in pre-Independence days?

THE HON. SRI M. A. MANICKAVELU :

**(*a*) —**

| *Year.* | *Number of deaths due to Tuberculosis.* |
|---|---|
| **1955** | 3,180 |
| **1956** | 3,098 |
| **1957** | 3,256 |
| **1958** | 2,918 |
| **1959** | 3,069 |

**(*b*) —**

| *Year.* | *Number of deaths.* |
|---|---|
| **1941** | 3,691 |
| **1942** | 3,391 |
| **1943** | 3,784 |
| **1944** | Not available as separate figures were not compiled. |
| **1945** | |
| **1946** | |
| **1947** | |

28th March 1961]

Sri K. VINAYAKAM : Do these figures represent deaths of such of those patients who were admitted in the Government hospitals or do they cover such of those who had not undergone any medical treatment and withered away for want of medical attendance?

The Hon. Sri M. A. MANICKAVELU : This refers to figures collected in Government institutions and in municipal areas.

Sri K. VINAYAKAM : What steps are being taken to prevent such kind of large scale deaths among T.B. patients. Has there been a tendency of decrease in the death of T.B. patients in the recent years?

The Hon. Sri M. A. MANICKAVELU : Yes, Sir, the number of deaths from T.B. has shown a marked decline during the past decennium (1949–59). The various steps taken like provision of facilities for modern treatment, hospitalisation in Sanatoria, early detection of active infection especially among the contacts during home-visiting in the course of domicilliary treatment and B.C.G. Vaccination, have gone a long way in checking the spread of infection.

Sri V. K. KOTHANDARAMAN : மதுவிலக்குச் சட்டம் வந்ததற்கு பிறகுதான் க்ஷயரோக வியாதி அதிகமாகிக்கொண்டு வந்திருக்கிறது. கள்ளுக்கடை திரும்ப வைக்க முடியாது என்றாலும் தென்னஞ்சாறு, பனஞ்சாறு போன்ற நீராக்கள் எங்கும் வசதியாகக் கிடைப்பதற்கு பெரிய கடைகளைத் திறக்க ஏற்பாடு செய்யப்படுமா ? க்ஷயரோக வியாதிக்கு இந்த நீரா பருகுவதானது மிகவும் உதவியாக இருக்கும் என்பதால் இப்படி ஏற்பாடு செய்யப்படுமா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : இதையெல்லாம் எந்த ஆராய்ச்சியில் இருந்து கனம் அங்கத்தினர் சொல்கிறார் என்று தெரியவில்லை. கடந்த பத்து வருஷங்களில் குறைந்து வந்திருக்கிறது என்று சொல்கிறேன். ஜனத்தொகை பெருகியிருக்கிறது. இதையும் கணக்கிட்டால் வியாதி ரொம்பக் குறைந்திருக்கிறது. கள்ளுக் குடிப்பதால் "ஹூபிங் காப்"–க்குத்தான் அனுகூலம் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன்.

*Maternity and child welfare centres, North Arcot district*

* 1135 *Q.*— Sri V. K. KOTHANDARAMAN : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) **G.O. Ms. No. 583, Health, dated 23—2—60**-ம் தேதி சர்க்கார் உத்தரவுப்படி 1960–61-ல் வட ஆற்காடு ஜில்லாவில் எங்கெங்கே **Maternity and Child Welfare** சென்டர்கள் புதிதாக திறக்கப்பட்டன ?

(இ) உத்தரவு போடப்பட்ட இடங்களில் இன்னும் ஏன் திறக்கப்படவில்லை ?

The Hon. Sri M. A. MANICKAVELU : (அ) One Maternity and Child Welfare Centre each in Kilpatti and Melvaithinamkuppam Panchayats and a Maternity Home in Jalarpet Panchayat.

( ) Owing to want of funds or want of suitable buildings the centres have not yet been opened by the Panchayats concerned.